உ

|| ஓம் நம : சிவாய ||

|| ஓம் நமோ பகவதே ஹரதத்தாய ||

சேக்கிழார் காவ்யம்

# காரைக்கால் அம்மையார்

(சில புதிய கருத்துக்கள்)




எழுதியவர்:

திருவையாறு அண்ணுஸ்வாமி சிரௌதிகள்



வெளியீடு நன்னாள்

ஸ்ரீ பராபவ ஹூ ஆனி 11 உ உத்தரம் நக்ஷத்திரம்

(25—6—1966) நடராஜா அபிஷேக தினம்

வெளியிடுபவர்:

தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி

பணியாளர், ஸ்ரீ ஹரதத்தர் பக்தஜன ஸபை

6, வேலாயுத முதலித் தெரு

நுங்கம்பாக்கம், சென்னை-34.

முதல் பதிப்பு 1000 பிரதிகள்

## முகவுரை

தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமான் காவ்யத்தில், நாயன்மார் சரித்திரங்களில் சில புதிய, சிறந்த கருத்துக்களை விளக்கி, அடியேன் வெளியிட்டு வரும் சிறு புத்தகங்களில், காரைக்கால் அம்மையார் சரித்திரக் குறிப்புகள் நாலாவது வெளியீடாக வருகின்றது. மற்ற வெளியீடுகளில் அடியேன் தெரிவித்துக் கொண்டதுபோல், திரு ஸி. கே. ஸுப்ரமண்ய முதலியார் அவருடைய விரிவுரையில் அடங்கிய விஷயங்களை நான் திரும்ப எடுத்துப் பேசவில்லை. எந்த சில இடங்களில் என் அபிப்ராயங்கள் மாறுபடுகின்றனவோ அவைகளை மாத்திரம் என் மனதிற்படும் காரணங்களுடன் விளக்கியிருக்கிறேன்.

ஆங்காங்கு வடமொழி க்ரந்தங்களிலிருந்தும் சில மேற்கோள்கள் எடுத்துக் காட்டுவது தமிழ்த் திருமுறைகளில் அதிகப் பயிற்சியும், பற்றுதலுமில்லாத ஸ்மார்த்தப் பிராமணர்கள் ஸம்ஸ்கிருத ஆதாரங்களிலாவது பூரண நம்பிக்கை கொண்டு சிவ பக்தியில் ஈடுபடவேண்டுமென்ற நோக்கத்துடன் தான்.

கதை சுருக்கத்தில் சேக்கிழார் பெருமான் பதங்களையும் வாக்கியங்களையும் எனக்குப் புண்ணியம் இருக்கும் அளவில் உபயோகித்திருக்கிறேன்.

வாழ்க சைவம்! வாழ்க சிவனடியார்கள்!
சூழ்க அரன் நாமம்! வெல்க சிவபரத்வம்!!

தி. வி. அண்ணுஸ்வாமி சிரௌதி

---

## "சிவகவச" சால்வைகள்

கதர் சால்வைகளில் கீழே குறித்த விதங்களில் தமிழ் எழுத்துக்களில், நாகர எழுத்துக்களில், தமிழ் நாகரம் இரண்டும் கலந்தவிதம் அன்பர்கள் இஷ்டம் போல் அச்சடித்துக் கொடுக்கப்படும்.

5 முழம் x $2\frac{1}{2}$ முழம் ரூ. 8–50
4 முழம் x $2\frac{1}{2}$ முழம் ரூ. 6-50

"வடமொழியும் தென் தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்காண்" என்பது அப்பர் ஸ்வாமிகள் திருவாக்கு. பஞ்சாக்ஷரமோ, ஹர, சிவ நாமாக்களோ வடமொழி தென்தமிழ் இருமொழிகளிலும் கலந்து அச்சடித்துக்கொள்வது உசிதம்.

# காரைக்கால் அம்மையார் துதிகள்

## திருத்தொண்டத் தொகை

"பேயார்க்கும் அடியேன்"

ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகள்

## திருத்தொண்டர் திரு அந்தாதி

நம்பன் திருமலை நான்மிதி யேனென்று தாளிரண்டும்
உம்பர் மிசைத்தலை யால்நடந்தேற உமைநகலும்
செம்பொன் உருவம்என் அம்மை எனப்பெற்றவள் செழுந்தேண்
கொம்பின் னுகுகாரைக் காலினில்மேய குலதனமே.

நம்பியாண்டார் நம்பிகள்.

## திருத்தொண்டர் புராணஸாரம்

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன் மிக்க
தனதத்தன் தரும்புனித வதியார் மாவின்
செங்கனிகள் திருவருளால் அழைப்பக் கண்டு
திகழ்கணவன் அதிசயித்துத் தேசம் நீங்க
அங்கஉடல் இழந்து முடிநடையா லேறி
"அம்மையே" எனநாதன் அப்பா என்று
பொங்குவட கயிலைபணிந்(து) ஆலங் காட்டில்
புனிதநடம் அனவரதம் போற்றினரே.

உமாபதி சிவாசார்யார்

## திருவாலங்காடு-மூத்த திருப்பதிகம்

(பண் - இந்தளம்)

திருச்சிற்றம்பலம்

கொங்கை திரங்கி நரம்பெ ழுந்து
குண்டுகள் வெண்பற் குழிவ யிற்றுப்
பங்கிசி வந்திரு பற்கள் நீண்டு
பரடுயர் நீள்கணைக் காலோர் பெண்பேய்
தங்கி அலறி உலறு காட்டில்
தாழ்சடை எட்டுத் திசையும் வீசி
அங்கம் குளிர்ந்தனல் ஆடும் எங்கள்
அப்பன் இடந்திரு ஆலம் காடே

(திருச்சிற்றம்பலம்)



ஊர்த்துவ தாண்டவமூர்த்தி



திருஞான
ஸம்பந்தர்



திருநாவுக்
கரசர்



ஸுந்தர
மூர்த்திகள்



மாணிக்க
வாசகர்

# ஈச்வர குரு த்யானங்கள்

## (1) தக்ஷிணாமூர்த்தி

குரவே ஸர்வ லோகானும் பிஷஜே பவரோகிணாம் |
நிதயே ஸர்வ வித்யானும் தக்ஷிணா மூர்த்தயே நம ||

## (2) நடராஜர்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

## (3) சைவ ஸமயாசார்யார்கள்

பூழியர்கோன் வெப்பொழிந்த புகலியர்கோன் கழல் போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரா னடி போற்றி
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர் திருத் தாள் போற்றி.

## (4) சைவ ஸ்தாபனாசார்யவர்யர் ஸ்ரீ ஹரதத்தர்

அறுகுணபூர்ண னுவான் அருமறை வணக்கம் கூறி
முறையிடு மீசன் த்யானம் முவெழு யாகங் கட்கும்
இறை பர மேசன் என்றும், மறைமொழி காயத் ரீயும்
பிறையணி பவனைப் போற்றும் பெருமைகள் பலவும் சொன்ன
குருஹர தத்தா சார்யர் திருவடி தலைமேற் கொள்வாம்.

## (5) அடியார்கள், சேக்கிழார்

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர் படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத்தொகைபடியார் பதம் போற்றி
ஒல்லையவர் புராண கதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர் சேக்கிழார் அடி போற்றி.

சிவமயம்

# காரைக்கால் அம்மையார் புராணம்

## கதைச் சுருக்கம்

காரைக்கால் என்னும் துறைமுகப் பட்டினத்தில் வெகு காலத்திற்குமுன் பல வணிகர்கள் வாழ்ந்து வந்தார்கள். வேதத்தில் விதிக்கப்பட்ட "ஸத்யம் வத" "தர்மம் சர" என்னும் இரண்டு வாக்கியங்களையும் அனுஸரித்து, அவர்கள் வாழ்க்கையிலும், தொழில் முறையிலும் உண்மையே பேசுவார்கள்; தர்ம நெறியில் நின்றார்கள். அவர்களில் தர்மதத்தன் என்று ஒரு வணிகர் இருந்தார். அவர் பல ஜென்மங்களில் செய்த சிவபுண்ணியத்தின் பலனாக, ஸாக்ஷாத் பரமேச்வரியே அவதரித்தாளோ என்று எல்லாரும் அதிசயிக்கும் வண்ணம் ஒரு பெண் குழந்தை அவதரித்தார். அவருக்குப் புனிதவதியார் என்று திருநாமம் வைத்தார்.

புனிதவதியார் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார். பிறந்து மொழி பயின்ற நாள் முதல் சிவநாமம் ஜெபிப்பார், சிவன் புகழையே பாடுவார்; சிவ பக்தியில் ஈடுபட்டார். விளையாடும் பாடல்களிலும் சிவன் புகழ்களையே பாடுவார்; சிவனடியார்களைத் தொழுவார்; அவர்கள் பாத தூளிகளைச் சிரஸால் வஹிப்பார். இப்படி வளர்ந்து காலக்ரமத்தில் பெண் தன்மையடைந்து ஸாமுத்திரிகா லக்ஷண ப்ரகாரம் ஸகல உறுப்புக்களும் அழகு மிக்க விளங்கினார்.

நாகப்பட்டினத்தில் வாழ்ந்த நிதிபதி என்னும் ஒரு வணிகன் மகன் பரமதத்தன் என்பவனுக்கு, குலத்துப் பெரியோர்கள் புனிதவதியாரை மணம் பேசவந்தார்கள். தனதத்தனும் மகிழ்வுடன் இசைந்து, திருமணத்தைக் குலமுறைப்படி விமரிசையாக நடத்தினார்.

புனிதவதியார் தனக்கு ஒரே குழந்தை யானதால், பெண்ணை விட்டுப் பிரிந்திருக்க மனமில்லாமல் பெண்ணும் அவள் புருஷனும் குடும்பம் நடத்த அவ்வூரிலேயே ஒரு தனி மாளிகை கட்டிக்கொடுத்து, இதர வஸதிகளையும் செய்துகொடுத்தார். பரமதத்தன் வியாபாரத் தொழில் ஆரம்பித்து நல்ல முறையில், வாய்மை நெறி தவறாமல், வளம் பெற வியாபாரம் நடத்தி

வந்தார். கற்பிற் சிறந்த புனிதவதியார் கணவருடன் இல் வாழ்க்கை நடத்தி வந்தார். சிவ பக்தியிலும் அடியார் வழி பாட்டிலும் ஈடுபட்டு,

நம்பர்அடி யார்அணைந்தால் நல்லதிரு அமுதளித்தும்
செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலும் முதலான
தம்பரிவி னுல்அவர்க்குத் தகுதியில்வேண் டுவகொடுத்தும்
உம்பர் பிரான் திருவடிக்கீழ் உணர்வுமிக ஒழுகுநாள்

ஒரு நாள் சிலர் பரமதத்தனைப் பார்க்க வந்தார்கள் மரியாதையாக இரண்டு மாங்கனிகளைக் கொடுத்தார்கள். பரம தத்தன் அவற்றினை ஏற்று, வந்தவர்களின் கார்யத்தைக் கவ னித்து, அவர்களுக்கு விடை கொடுத்தனுப்பினான். பிறகு இரண்டு மாங்கனிகளையும் தன் இல்லத்திற்குக் கொடுத்தனுப் பினான். புனிதவதியார் அவற்றை ஜாக்கிரதையாக வாங்கி வைத்தார். (செய்யுள் 16 விளக்கம் பார்க்கவும்)

சிறிது நேரத்திற்கெல்லாம் பரமேச்வரன் திருத்தொண்டர் ஒருவர் உணவின் மிகு வேட்கையினால் மனையுட் புகுந்தார். அவருடைய நிலையைக் கண்டு உடனே அவர் பசியைத் தீர்க்க வேண்டுமென்று புனிதவதியார் தீர்மானித்தார். அர்க்ய பாத்யாதிகளால் முறைப்படி வழிபட்டுப் பின் இலை போட்டு அமரவைத்தார். அன்னம் தயாராக விருந்தது. கறியமுது ஆகவில்லை ஆதலால் கணவர் அனுப்பின இரண்டு மாங்கனி களில் ஒன்றை இலையில் வைத்து அன்னம் பரிமாறி, ஆடைத் தயிரும் வார்த்தார். அடியாரும் மாங்கனியோ டினிதருந்திப், பசி தீர்ந்து அம்மையாரை ஆசீர்வதித்துப் போனார். புனித வதியாரும் மற்றைக் கறியமுது தயாரிப்பதிலும் இதர வீட்டு வேலைகளிலும் ஈடுபட்டார்.

நடுப்பகற்பொழுதில் கணவர் வீடுவந்து ஸ்நானம் செய்து போஜனம் செய்ய உட்கார்ந்தார். புனிதவதியார் கறியமுது களையும் அன்னமும் படைத்து எஞ்சியிருந்த மாங்கனியையும் இலையில் இட்டார். கணவர் அந்த மாங்கனியை சாப்பிட்டு, அது மிகவும் ருசிகரமாக விருந்தமையால், "இனையதொரு பழம் இன்னும் உளது; அதனையிடுக" வென்றார்.

புனிதவதியார் என் செய்வார்! புருஷனுக்குத் தெரியாமல் தான் விநியோகம் செய்ததற்கு ஓரளவு வருந்தி, உள்ளே சென்று, ஏகாந்தமாக, உற்ற விடத்து உதவும் விடையவர் தாள் உணர்ந்தார் (செய்யுள் 25 விளக்கம் பார்க்கவும்) ஈச்வரன் அரு

ளால் அதிமதுர மாங்கனியொன்று அவர் கையில் வந்துற்றது. மிக ஸங்கடமான நிலையில் தனக்கு அருள் செய்த ஈச்வரன் திருவடிகளைப் போற்றிப் பழத்தைக் கணவர் இலையில் படைத்தார்.

ஈச்வரன் அருளால் வந்த பழம் அன்றோ! முதல் பழத்தைக் காட்டிலும் அதிக ருசிகரமாக விருந்தது. அதைச் சாப்பிட்ட கணவர்,

## செய்யுள் 26.

மற்றதனைக் கொடுவந்து மகிழ்ந்திடலும் அயின்றதனில்
உற்றசுவை அமுதினுமேற் படவுளதா யிட 'இதுதான்
முற்றருமாங் கனியன்று; மூவுலகிற் பெறற்கரிதால்
பெற்றதுவே றெங்'கென்று பெய்வளையார் தமைக்
கேட்டான்.

ஈச்வரன் அருளைப் பிறருக்கு சொல்வது முறையல்ல வென்றும், ஆயினும் கணவருக்கு உண்மையை மறைப்பது குற்றமென்றும் ஒரு க்ஷணம் யோசனை செய்து, கணவரிடம் உண்மையைச் சொல்வதே கடமை யென்றுணர்ந்து புனிதவதியார் நடந்ததை நடந்தபடி சொன்னார்.

கணவர் கேட்டு ஆச்சரியப் பட்டார், இப்படியும் ஈச்வரன் அருள் பிரத்யக்ஷமாக நிகழுமா? தன் மனைவியார் பால் நிகழுமா! என்று ஸந்தேகம். ஈச்வரன் அருளானால், மற்றும் ஓர் பழம் பெற்றுத் தரும்படி மனைவியைக் கேட்டார். புனிதவதியார் உள்ளே சென்று, மற்றும் ஓர் மாங்கனி யருளும்படி ஈச்வரனை வேண்டினார். "தாங்கள் அருள் செய்யாவிடில் இதற்குமுன் அருள் செய்தீர் என்று சொன்ன வார்த்தை பொய்யாகிவிடும்" என்று விண்ணப்பித்துக் கொண்டார், மேலும் "கணவர் ஈசனருள் என்ற வார்த்தையில் ஸந்தேகப் படுகிறார்; ஈச்வரன் மற்றும் ஓர் பழம் அருள் செய்தால் கணவர் மனம் தெளிவார்" என்றும் புனிதவதியார் நினைத்திருப்பார். ஈச்வரன் அருளால் மற்றும் ஓர் மாங்கனி வருகிறது, அதை எடுத்துக் கொண்டு கணவர் எதிரே வருகிறார். அதைக் கண்டதுமே கணவர் மனம் நடுங்கிவிட்டது. தான் மறுபடி பழத்தைக் காண்பது தோற்றமா உண்மையா வென்ற பதட்டத்துடன், கையை நீட்டினார் (பழம் வந்துவிட்டது; அதையும் சாப்பிட வேண்டுமென்ற நப்பு ஆசை கொண்டல்ல). புனிதவதியார் பழத்தைக் கணவர் கையில் கொடுக்கிறார்; ஆனால் கணவர்

அதைக் கையில் வாங்கி, அது உண்மையில் மாங்கனிதான் என்று உணர்ந்ததும் அது மறைந்து விடுகிறது. அப்பொழுது அவர் உள்ளம் மேலும் நடுங்குகிறது, மனைவி ஈச்வரன் அருளால் இருமுறை கனிகளைப் பெற்றுள்; தான் பரீக்ஷார்த்த மாகக் கேட்டபொழுதும் பெற்றுள்; அந்தப பழத்தைத் தன் கையில் தாங்குவதற்குக் கூடத் தனக்கு யோக்யதை இல்லை; மனைவி ஈசனருளைப் பெற்றுப் பரதேவியாகத் திகழ்கிருள்; தான் ஈசனருளுக்குப் பாத்திரமாகாத ஓர் பாபி; இனியவள் ஒரு தேவியாகப் போற்றப்பட வேண்டியவள், என்று பரமதத் தன் முடிவு செய்தார்.

அந்த க்ஷணம் முதல் அவள் தன்னுடைய மானுட மனைவி யென்ற எண்ணம் தவிர்த்தார். அவளை விட்டுப் பிரிந்து விட வேண்டுமென்று தீர்மானித்து, வியாபார நிமித்தம் அயல் நாடு போவதாகச் சொல்லி, கப்பல் நிர்மாணம் செய்து, சரக்குகள் ஏற்றி அயல் நாடு சென்று, பணம் சேர்த்துப், பாண்டிநாட்டில் ஒரு நகருக்குத் திரும்பி வந்து, அங்கு வாழ்ந்தார். கொஞ்ச காலம் சென்றபின் அந்த ஊரில் வேறு ஒரு பெண்ணை மணம் செய்து கொண்டார் காலக்கிரமத்தில் ஒரு பெண்குழந்தை யும் பிறந்தது. அந்தக் குழந்தைக்குத் தன் முதல் மனைவியின் பெயர் "புனிதவதி" யென்றே பெயர் வைத்தார்; சில வருஷங்கள் சென்றன.

காரைக்காலில் புனிதவதியார், வியாபார நிமித்தம் அயல் நாடு சென்ற கணவர் திரும்பி வரும் காலத்தை எதிர்பார்த்து வாழ்ந்து வந்தார். சில வருஷங்களாகியும் கணவர் வரக் காணும். (பெற்றோர்கள் சிவபதம் அடைந்ததாக நாம் ஊகித் துக் கொள்ள வேண்டும்) பரமதத்தன் பாண்டி நாட்டில் வேறு பெண்ணை மணம் செய்து கொண்டு வாழ்ந்து வந்த விஷயம் பராபரியாகச் சுற்றத்தார்கள் கேள்விப்பட்டு, நம்பகமான சிலரை அனுப்பி, விஷயம் உண்மை யென்று தெரிந்து கொண்டு புனிதவதியாரை, அவர் புருஷனிடம் கொண்டுபோய் விடுவதே முறையென்று தீர்மானித்து, ஒரு பல்லக்கில் அவளை ஏற்றி, புருஷன் வாழ்ந்த நகரத்திற்கு அழைத்துச் சென்று, ஊரின் எல்லைப் புரம் சென்றதும், புருஷனுக்குத் தகவல் அனுப்பினுர்கள் பரமதத்தன் இரண்டாம் மனைவியுடனும், புனிதவதி என்ற பெண்குழந்தையுடனும். பாத காணிக்கைகளுடன் புனித வதியார் இருக்குமிடம் வந்து, அவரைத் தெய்வமாகப் பாவித்து நமஸ்கரித்து, அவர் அருளால் தான் வாழ்ந்து வருவ தாகத் தெரிவித்துக் கொண்டார். புனிதவதியார், கணவர்

செயலைக் கண்டு மனம் பதைத்து சுற்றந்தார் பக்கம் ஒதுங்கி நின்றார். சுற்றத்தார்கள் பரமதத்தன் மனைவியை வணங்கின காரணம் வினவினார்கள். பரமதத்தன் மாம்பழ வரலாற்றைச் சொல்லிப் புனிதவதியார் மானிடப் பெண்ணல்ல வென்றும் ஈச்வரன் அருள் பெற்று ஈச்வரியாகத் திகழ்பவர் என்றும் சொல்லி, எல்லாரையும் வணங்கச் சொன்னான். சுற்றத்தார்கள் செய்வதறியாமல் விழித்தார்கள். புனிதவதியார் கணவர் மன மாற்றம் கண்டு பிரமித்து, உடனே ஈச்வரன் அருளால் ஒரு தீர்மானத்திற்கு வருகிறார்.

''ஹே பரமேச்வரா, நின்னருளால் ஒரு காலத்தில் என் கணவர் திரும்பி வருவார் என்று எண்ணி, அவருக்காக இந்த ஊனுடம்பையும் வனப்பையும் தாங்கி வந்தேன். நின்னருள் வேறுவிதமாக இருக்கிறது. என் கணவர் என்னை மனைவியாக பாவிக்கவில்லை யென்றும் தெய்வமாக பாவிக்கிறார் என்றும் அறிந்தேன். இனி இந்த ஊனுடம்பு யாருக்காகத் தாங்க வேண்டும்? கண்டவர் பார்க்கும்படி இந்த வனப்பு சரீரம் வேண்டாம். ஈச்வரா, நான் இனி உன்னைச் சேர்ந்தவள். உன்னுடன் நடமாடும் பேய்களுடைய வடிவத்தை எனக்கு அருள்வாய்'' என்று வேண்டினார். ஈச்வரன் அருளால் அவர் உடனே ஊனுடம்பை உதறி எறிந்து, என்பு வடிவமாய் நின்றார்.

அது ஸமயம் :—

மலர் மழை பொழிந்த தெங்கும் வானதுந் துபியின் நாதம்
உலகெலாம் நிறைந்து விம்ம உம்பரும் முனிவர் தாமும்
குலவினர்; கணங்க ளெல்லாம் குணலையிட்டன; முன் நின்ற
தொலைவில்பல் சுற்றத்தாரும் தொழுதஞ்சி அகன்று போனார்.

பக்கத்திலிருந்தவர்கள் பயந்துநடுங்கி வணங்கி அகன்று போனார்கள்.

அம்மையார் ஈச்வரனைப்போற்றி '' அற்புதத் திருஅந்தாதியும் ஆய்ந்தசீர் திரு இரட்டை மாலை அந்தாதியும் பாடினார். மனோவேகத்தினும் அதி வேகமாகக் கைலாஸத்தை நோக்கிச் சென்றார். பரமேச்வரன் வீற்றிருக்கும் கைலை மலையைக் காலால் மிதிக்கக் கூடாதென்று, மலையடிவாரம் சென்றதும் தலையைக் கீழே ஊன்றி தலையாலே நடந்து மலைமீதேறினார்.

(கைலாஸ மலையை ஈச்வரன் ஸ்வரூபமாகக் கொண்டால், அடிவாரம் ஈச்வரன் திருவடிகளைக் குறிக்கும். ஆகவே அடிவாரம் சென்றதும், புனிதவதியார் தன் தலையை ஈச்வரன் திருவடிகளில் பொருத்தினார் என்றும் ஏற்படுகிறது.)

மேலே பார்வதி ஸகிதராய் பரமேச்வரன் வீற்றிருந்தார். என்பு உடம்புடன் தலையால் ஏறிவரும் புனிதவதியாரைப் பார்த்து இமயவல்லி திருக்கண்ணோக்குற்றாள். "தலையினால் நடந்திங்கேறும் எம்பெருமானோர் எற்பின் யாக்கை அன் பென்னே!". என்று ஈச்வரி அதிசயித்தாள். ஈச்வரன்

## செய்யுள் 58.

"வரும்இவள் நம்மைப் பேணும் அம்மைகாண் உமையே மற்றிப்
பெருமைசேர் வடிவம் வேண்டிப் பெற்றனள்" என்று பின்றை
அருகவந் தணைய நோக்கி "அம்மையே" யென்னும் செம்மை
ஒருமொழி உலகமெல்லாம் உய்யவே அருளிச் செய்தார்

அம்மையாரும் "அப்பா" வென்று பங்கயச் செம்பொற் பாதம் பணிந்து வீழ்ந்தெழுந்தார். ஈச்வரன் அம்மையாரை அனுக்ரஹித்து வேண்டும் வரம் கேட்கும்படி திருவாய் மொழிந்தார். அம்மையார்.

இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
"பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும், இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்து பாடி
அறவாநீ! ஆடும் போதுன் அடியின் கீழ் இருக்க" என்றார்.

ஈச்வரன் அவ்வாறே ஆகுக என்று அனுக்ரஹித்து ஊர்த்துவ தாண்டவம் புரியும் திருவாலங்காட்டில் அவர் அடியின் கீழிருந்து ஆனந்தமாகப் பாடும்படி அருள்புரிந்தார்.

அருளைப்பெற்ற அம்மையாரும் அதி வேகமாகத் தலையாலேயே நடந்து சென்று திருவாலங் காட்டுக்கோயிலில் நடராஜர்

ஸந்நிதி சென்று நடராஜாவை வணங்கி "கொங்கை திரங்கி" என்ற திருப்பதிகத்தையும். "எட்டியிலவம்" என்ற திருப்பதிகத்தையும் முதலாகப்பாடினார். அந்த க்ஷணம் முதல், அம்மையார் நடராஜாவின் திருவடி நீழற்கீழ் நித்யானந்தத்தை யனுபவித்துக் கொண்டு ஆனந்தமாகப் பாடிக்கொண்டே இருக்கிறார். ஈச்வரன் ஆடிக்கொண்டேயிருக்கிறார். நடராஜாவின் நடனம் ஆதியும் முடிவும் இல்லாத அற்புதத் தனிக் கூத்து. அம்மையாரின் பாடலும் அந்தக்ஷணம் முதல் முடிவில்லாத நித்யானந்தப் பாடல்.

காரைக்காலில் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்ததாலும் ஈச்வரனால் "அம்மையே" என்று அழைக்கப் பெற்ற பாக்யம் அடைந்த தாலும் "காரைக்கால் அம்மையார்" என்ற புகழ்ப் பெயருடன் திகழ்கின்றார்

அம்மையார் அருளிய பாடல்கள் 11ம் திருமுறையில் திகழ்கின்றன.

அம்மையார் பரமேச்வரன் திருவருளைப் பெற்ற நன்னாள் பங்குனிமீ சுவாதி (ஜோதி) நக்ஷத்திரம்,

சுபம்

தி. வி. அ. சிரௌதி

---

# அடுத்த வெளியீடு

# அப்பூதியடிகள் நாயனார்

## சரித்திரக் குறிப்புகள்.

——o——

சிவமயம்.

# காரைக்கால் அம்மையார் புராணம்.

## திருத்தொண்டத் தொகை
## " பேயார்க்கு மடியேன் "

### செய்யுள் 1.

மானமிகு தர்மத்தின் வழிநின்று வாய்மையினில்
ஊனமில்சீர்ப் பெருவணிகர்.

வேதத்தில் சொல்லப்பட்ட இரண்டு முக்கியமான விதி வாக்யங்கள் நம் நினைவுக்கு வருகின்றன. ஸத்யம் வத; தர்மம் சர; காரைக்காலில் வசித்த வணிகர்கள் குடும்ப வாழ்க்கையிலும் தொழில் முறையிலும் உண்மையே பேசுவார்கள்; தர்மநெறி தவறமாட்டார்கள்.

### செய்யுள் 15.

நம்பர் அடி யாரணைந்தால் நல்ல திரு அமுதளித்தும்
செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலு முதலான
தம்பரிவினுல் அவர்க்குத் தகுதியின் வேண்டுவ
கொடுத்தும்.
உம்பர்பிரான் திருவடிக்கீழ் உணர்வுமிக வொழுகுநாள்.

நம்பரடியார் அணைந்தால். அம்மையார் எப்படி அவர்களை வழிபட்டார் என்று அறிகிறோம்.

ஒழுகுநாள் :— பல நாட்கள், சில மாதங்கள் சென்றன என்று குறிப்பிட்டு, அடுத்த செய்யுளில், வேறு ஒரு முக்கிய விஷயம் — மாங்கனி விஷயம் ஆரம்பமாகிறது. திருநீலகண்ட நாயனுர் சரித்திரத்திலும் 3-வது செய்யுளில் 3-வது வரியில் — ஒழுகுநாள் — என்ற பதங்கள் போட்டு — நாட்கள் சென்றதைக் குறிப்பிட்டு, 4-ம் வரியில் — வேறு முக்கிய விஷயம், நாயனுர் சிற்றின்பத்துறையில் எளியரான விஷயத்தைக் கூறுகிருர்.

## செய்யுள் 16

பாங்குடைய நெறியின்கண் பயில்பரம தத்தனுக்கு
மாங்கனிகள் ஓரிரண்டு வந்தணைந்தார் சிலர் கொடுப்ப
ஆங்கவைதான் முன்வாங்கி அவர்வேண்டுங் குறை
யளித்தே
"ஈங்கிவற்றை இல்லத்துக் கொடுக்க" என இயம்பி
னான்.

பரமதத்தன் பகற்பொழுதில் தான் போஜனத்திற்குச் செல்லும் போது பழங்களைத் தன்னுடன் எடுத்துச் சென்றிருக்கலாம். ஸாதாரணமாக யாரும் அவ்விதம் தான் எடுத்துப் போயிருப்பார். பழம் கொண்டுவந்தவர் மூலமாகவோ, கடையில் வேலை செய்யும் ஒரு ஆள் மூலமாகவோ, பழங்களை முன்னதாகச் சேர்ப்பிக்கும்படியான அவசியம், அவஸரம் ஒன்றுமில்லை. ஆகவே, முன்னதாக ஒருவர் மூலம் அனுப்பிவைத்தது, ஈச்வரன் அருளால் அவ்வண்ணம் நிகழ்ந்தது. அப்படி அனுப்பினதால்தான் வீட்டுக்கு சிவனடியார் வந்தபோது, அவருக்குப் புனிதவதியார் ஒரு கனியைப் படைக்கவும், பின்னர் கணவர் இரண்டாவது கனியைக் கேட்டபோது, அம்மையார்பால் ஈச்வரன் அருள் வெளிப்படவும் மூலகாரணம். ஆதலால்

எல்லாம் எனையாளும் ஈசன் செயல்—

நம் செயல் என்பது இல்லை—

ஆட்டுவித்தால் யார் ஒருவர் ஆடாதாரே—

யோ ந: பிரசோதயதி புத்திம் (நம் புத்தியை ப்ரேரேரிப்பவர் பரமேச்வரன்)

என்ற இந்த உண்மைகளை நாம் ஒரு போதும் மறக்கக் கூடாது.

செய்யுள் 18. "வேதங்கள் மொழிந்தபிரான்" (வேதங்களை மொழிந்தவரென்றும், வேதங்களைப் பாடியவர் என்றும் (வேதகீதா, பாடினார் மறைகள் நான்கும்) — திருமுறைகளில் பல இடங்களில் இந்த உண்மைகள் அமைந்திருக்கின்றன.

அஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதம் ஏதத் ருக்வேதோ, யஜுர்வேதஸ் ஸாமவேத :—(பிரஹதாரண்யக உபநிஷத்)

மேலும் ஹாலாஸ்ய மாகாத்ம்யத்தில் ஈசான முகத்தி லிருந்து சைவ ஆகமங்களும் (28) தத் புருஷம், அகோரம், வாமதேவம், ஸத்யோஜ் ஜாதம் முகங்களிலிருந்து முறையே, ருக்வேதம் (21 சாகைகள்) யஜுர்வேதம் (101 சாகைகள்) ஸாமவேதம் (1000 சாகைகள்) அதர்வணம் (9 சாகைகள்) வெளிவந்தன என்பதாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

ஸாமகானம் என்று போற்றப்படுகிற ஸாமவேதம் அம்மை பாகமான வாமபாகத்திலிருந்து வந்ததும் எவ்வளவு பொருத் தம் பாருங்கள்.

பகவான் பரமேச்வரன் வேதங்களில் ஸாமவேதமாக இருக்கிறார்

(ஞான—3—திருப்புகலி—சாம நல் வேதனும்)

(ஸுந்தரர் 7 திருநள்ளாறு-சாமவேதனை)

பகவத்கீதை உபந்யாஸம் செய்யும் ஸ்மார்த்தப் பிராம்ம ணர் பெரும்பாலோர், கிருஷ்ணனே பகவான் என்றும் அவரே ஸாமவேத ஸ்வரூபி யென்றும் பிரசாரம் செய்து பாமர ஜனங்களை ஏமாற்றுகிறார்கள். ஸ்ரீராம அவதாரத்தில் தான் உபதேசம் பெற்ற சிவகீதையின் ஸாராம்சத்தைத்தான் ஸ்ரீ கிருஷ்ண அவதாரத்தில் பகவத் கீதை என்பதாக அர்ச்சு னனுக்கு உபதேசம் செய்கிறார் ஆக கிருஷ்ணன் வக்தா அல்ல; ப்ரவக்தா; ஒருவர் (ஈச்வரர்) சொன்னதைச் சொல்ப வர். இது விஷயம் சைவஸ்தாபனாசார்யவர்யர் ஸ்ரீ ஹரதத்தரால் தமது கிரந்தம் சுருதி ஸூக்தி மாலையில் விளக்கப்பட்டிருக் கிறது. "பகவான்" என்னும் சிறப்புப் பெயர் ஷாட்குண பரிபூர்ணரான பரமேச்வரன் ஒருவரையே குறிக்கும். பகவத் கீதை என்ற பெயரும் — பகவானான பரமேச்வரனால் (முதல்) உபதேசிக்கப்பட்ட (ஈச்வர) கீதை யென்று தான் பொருள் படும்.

மனதில் கல்மஷமில்லாமல் சுருதி ஸூக்தி மாலை படித் துணர்ந்த பண்டிதர்கள் மேலே சொன்ன உண்மைகளை நன் குணர்வார்கள்; சிவபரத்வம் தான் பேசுவார்கள்.

செய்யுள் 19. "கறியமுதங் குதவாதே" பச்சடி, கூட்டு, குழம்பு, ரஸம், ஒன்றும் தயாராகவில்லை யென்றும் நாம் அமைத்துக்கொள்ள வேண்டும். ஆதலால் தயாராகவிருந்த ஆடைத் தயிரை வார்த்தார் என்று நாம் ஊகிக்கலாம்.

செய்யுள் 20. அல்லல் தீர்ப்பவர் அடியார்தமை அமுது செய்வித்தார்.

அல்லல் தீர்ப்பவர் பரமேச்வரன்தான். விஷ்ணு ப்ரம்மாதிகள் தனியாகவோ எல்லாரும் சேர்ந்தோ தமக்கு நேர்ந்த அல்லல்களைத் தீர்த்துக்கொள்ள முடியாத காலத்து, ஈச்வரன் தான் தீர்த்து வைத்தார் (விஷாபஹரணம்; த்ரிபுர ஸம்ஹாரம் முதலிய வீரச் செயல்கள்.)

இந்தச் சரித்திரத்தில் — கணவர் அனுப்பிய இரண்டு மாங்கனிகளில் ஒன்றை அடியாருக்குப் படைத்தார். அது காரணமாக — புருஷன் சாப்பிடும்போது இரண்டாவது பழத்தை விரும்பிக் கேட்கும்போது — அல்லல் ஏற்படுகிறது, பரமேச்வரன் அதிமதுர மாங்கனி உதவி அல்லல் தீர்த்து வைக்கிருர். சிறுத்தொண்ட நாயஞர் சரித்திரத்திலும்.

செய்யுள் 74. அதுவுங்கூட (தலைக்கறியும் கூட) நாம்
உண்பது என்ருர், இடர்தீர்ப்பார்.''

சந்தனத்தாதிமூலம் இந்த இடரை முன்னமேயே ஈச்வரன் தீர்த்துவைத்திருந்தார்.

அமுது செய்வித்தார் — பதங்களைக் கவனிக்க : கண்ணப்ப நாயஞர் சரித்திரத்திலும் செய்யுள் 126 ''அன்ன இன் மொழிகள் சொல்லி அமுது செய்வித்த வேடர்'' ஈச்வரன் ஏற்று சாப்பிட்டார் என்றே அர்த்தம்.

## செய்யுள் 24.

மனைவியார் தாம்படைத்த மதுரமிக வாய்த்தணி
தனை நுகர்ந்த இனியசுவை ஆராமைத் தார்வணிகன்
''இனையதொரு பழம் இன்னும் உளததனை இடுக'' என
அனையதுதான் கொண்டுவர அணைவார்போல் அங்ககன்ருர்.

இந்த இடத்தில் நாம் நன்ருக நிதானித்து அம்மையாரின் மன நிலையை உணரவேண்டும். இனையதொழு பழம் உளது அதனையிடுக என்ருன் கணவன். ஒரு பழத்தை சிவனடியார்க்கிட்ட விஷயம் அம்மையாருக்குத் தெரியாதா! தெரியும் மறந்துவிடவில்லை. அது உளதாகச் சொல்லிக் கணவன் ஆவலுடன் கேட்டபொழுது, உடனே விஷயத்தைச் சொல்லி, கணவனுக்

குப் பெருத்த ஏமாற்றத்தை யளிக்கவிரும்பவில்லை. இது ஸாதாரண அர்த்தம்.

இதைவிடச் சிறந்த விளக்கம்:- கற்பிற் சிறந்த காரைக்கால் அம்மையார் கணவனை தெய்வமாக வழிபட்டார் என்றே நாம் உணரவேண்டும். கணவன் வார்த்தை கேட்ட க்ஷணம் **Implicit obedience** — பழம் ஒருவருக்கு இட்டது மனதில் புலனாகும் முன் புருஷன் வார்த்தையை அனுஸரித்து நடக்கும் எண்ணமே முதலில் தோன்ற, இன்னொரு பழம் இருப்பதாகவும், அதைக் கொணர்வார்போலவும். "அங்ககன்றார்"

பின்னும் ஓர் மிக நுட்பமான கருத்தும் த்வனிப்பு கணவர் இன்னுமோர் பழம் உளது என்றார் ; உளதாகலாம். அவரே மற்றும் ஓர் பழம் கொணர்ந்து வைத்திருக்கலாம். கணவர் வார்த்தை பொய்க்காது ஆகவே, உள்ளே சென்று பார்த்து, இருந்தால் அதைக் கொண்டுவர அணைவார்போல அங்ககன்றார்.

இரண்டாவது கனியையும் கொண்டு வந்து இடுமாறு கணவர் சொல்லுகிறார், அன்பர்களே இந்த இடத்திலும் நாம் நிதானிக்கவேண்டும். பரமதத்தன் பேராசைப் பிடித்தவனென்றும் நாக்கின் வயப்பட்டனென்றும் மனைவிக்கு ஒரு பழம் இருக்கட்டும் என்ற நல்லெண்ணம் இல்லாதவனென்றும் குறை சொல்லக் கூடாது.

இரண்டாவது பழம் விநியோகம் ஆன விஷயம் தெரியாது இருப்பதாக நினைத்துக் கேட்டான்: அவ்வளவுதான். விநியோகம் ஆகாமல் இருந்தால் புனிதவதியார் மிக ஸந்தோஷமாகவே இரண்டாவது பழத்தையும் படைத்திருப்பார்; தனக்கு ஒரு பழம் இருக்கட்டும் என்று எண்ணமல், இரண்டாவது பழத்தையும் கணவர் போடச் சொல்லுகிறாரே என்று புனிதவதியார் நினைத்திருக்கமாட்டார். நாம் பரமதத்தனைக் குறைகூற வேண்டாம்.

அவன் இரண்டாவது பழத்தையுமிடுமாறு கேட்காமல் இருந்தால், புனிதவதியார் விடையவர் தாள் உணர்தலுக்கும் அவர்பால் ஈச்வரன் அருள் வெளியாவதற்கும் ஸந்தர்ப்பமேது! சரித்திர வரலாறே எந்த விதம் மாறியிருக்குமோ!

ஆகவே ஈத்வரன் அருளால்தான் பரமதத்தனுக்கு இரண்டாவது பழத்தையும் படைக்கும்படி கேட்கும் எண்ணம் உதித்தது.

ஈச்வரன் தான் உள்ளிருந்து ஒவ்வொரு உயிரையும் இயக்குவிக்கிறார். புத்தியைச் செலுத்தி வார்த்தைகள் பேசவும் செய்கிறார்.

யோ ந: பிரசோதயதி புத்திம்
ய: ந: புத்திம் பிரசோதயதி

அவர் ஈச்வரன். உயர் காயத்ரீ மந்த்ரார்த்தத்தை-சைவஸ்தாபன ஆசார்யார் ஸ்ரீ ஹரதத்தர் தமது சுருதி ஸூக்திமாலையில் விளக்கியிருப்பதை நன்கு படித்துத் தெளிக!

## செய்யுள் 25.

அம்மருங்கு நின்றயர்வார் அருங்கனிக்கங் கென்செய்வார்
மெய்ம்மறந்து நினைந்துற்ற விடத்துதவும் விடையவர்தாள்
தம்மனங்கொண் டுணர்தலுமே யவரருளால் தாழ்குழலார்
கைம்மருங்கு வந்திருந்த ததிமதுரக் கனியொன்று.

உள்ளே போனதும் மற்றொரு பழம் இல்லாததை மனம் உணர்ந்தது. ஆகவே

அம்மருங்கு நின்றயர்வார் அருங்களிக் கென்செய்வார்! மனம் என்ன நினைத்தது? ஆஹா! கணவர் இரண்டு பழம் அனுப்பினார். அவருக்குத் தெரியாமல், அவர் உத்தரவில்லாமல் ஒரு பழத்தை விநியோகம் செய்து விட்டேனே! அவர் அனுப்பிய பழத்தை, அவர் விரும்பிக் கேட்கும்பொது, அளிக்க முடியாத நிலையில் இருக்கின்றேனே. உத்தம ஸ்திரீகள் தலைவர் பணி தலை நிற்பவர்கள்! சிறுத்தொண்ட நாயனார் சரித்திரத்தில் பைரவர் "மைந்தனை நாடி அழையும்" என்று பணித்தபோது நாயனார் முதலில் - மைந்தா வருவாய் - என அழைத்தார். "தையலாரும் தலைவர்பணி தலை நிற்பாராய்த் தாமழைப்பார்" என்று சேக்கிழார் பெருமான் பாடியிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

இந்த இடத்தில் சிவனடியார்க்குத் தான் ஒரு பழம் இட்டது ஸரியான செயலென்றே அம்மையார் நினைத்ததாக — திரு ஸி. கே. ஸு. முதலியார் விளக்கம் செய்கிறார். அது சிறந்த விளக்கமாக என் புத்தியில் படவில்லை.

கணவர் தம்மளவு அடியார் பணியில் ஈடுபடவில்லை என்று லும் அவர் அறியாமல் ஒரு விநியோகம் செய்ததற்கு அம்மை யார் வருந்தினர் என்று விளக்கம் செய்வதுதான் அம்மை யாருக்குப் பெருமைதரும். புருஷன் இரண்டாம் பழம் விரும்பிக் கேட்காதிருந்திருப்பாளுகில், அம்மையார் வருந்தக் காரணமே யில்லை.

கணவர் அனுப்பின பழம் ஒன்றைக் கணவர் விரும்பிக் கேட்கும்போது, அளிக்கமுடியாத நிலை; கற்பிற் சிறந்த அம்மை யாருக்கு மிகச் சங்கடமான நிலை. அம்மையார் என் செய்தார்.

"மெய்ம்மறந்து உற்றவிடத் துதவும் விடையவர் தாள் உணர்தலுமே"

பதங்கள் மிக அழகாக அமைந்திருப்பதை நாம் உணர்ந்து பன்முறையும் படித்து ஆனந்திக்கவேண்டும். "உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்" என்று திருத்தொண்டர் புராணம் ஆரம்பித்த சேக்கிழார் பெருமான், "அம்மையார்-விடையவர் தாள் உணர்தலுமே" என்று பாடியிருக்கிறார். அம்மையார் பெருமையை நாம் உணரவும் முடியுமோ!

தான் ஒரு ஸங்கடமான நிலையில் இருப்பதை அம்மையார் அறிந்தார்; ஆனால் அதை வ்யக்தமாக ஈச்வரனிடம் விண்ணப் பித்துக் கொண்டார் என்று சேக்கிழார் பாடவில்லை. நாமும் அப்படி நினைக்கக்கூடாது. அம்மையார் நிலை, அப்பருக்குத் தெரியாதா? எந்தவிதம் அனுக்ரஹம் செய்யவேண்டுமோ அதையும் அவர் தாம் அறிவார்.

"வேண்டுவது அறிவோய் நீ—வேண்டத்தக்கது
தருவோய் நீ— (அப்பர்)

சில வித்வான்கள் பிரஸங்கம் செய்யும்போது அம்மையார் மாங்கனி வேண்டினதாகச் சொல்லுகிறார்கள். திரு ஸி கே ஸு முதலியார் அவர்கள் கூட ஈச்வரனிடம் விண்ணப்பித்துக் கொண்டு கணவர் விரும்பிய விதம். மாங்கனி பெற்றுவரும் நோக்கத்துடன் உள்ளே சென்றதாக விளக்கம் செய்கிறார்.

திரு முதலியார் குறிப்புகள்.

பக்கம் 841 அருங்கனிக் கென் செய்வார் என்றதனால், கனி கொண்டுவர முயலுதல் அவரது எண்ணம் என்பது விளங்கும்.

பக்கம் 842 கனி கொண்டுவந்து கொடுத்தலே மேல் என்று சிந்திக்கவே, அவ்வாறு கனி கொண்டுவர என்ன வழி காண் பார் என்றதாம்.

இந்த விளக்கங்களை நன்கு யோஜித்துப் பாருங்கள். கனி பெறுவதற்கும், கொண்டுவருவதற்கும் என்ன வழி என்று யோஜிக்கவா அம்மையார் உள்ளே சென்றார்! ஈச்வரன் உற்றவிடத் துதவுவார் உண்மைதான். ஆனால் எந்த விதம் அருள் செய்வாரோ! "கனி கொடுத்தருள்வார்" என்று அம்மையாரே தீர்மானித்து விடலாமா? அம்மையார் கனி யருளும்படி வேண்டி ஈச்வரனும் அருள் செய்தாராகில், அதைக் கணவனுக்கு அளித்து, அடியாருக்குப் படைத்த செயலை மறைத்து விடலாமென்று அம்மையார் நினைத்திருப்பாரா? கணவன் தன்னளவு ஈச்வர பக்தியில் பக்குவமடைய வில்லை யென்பதற்காக வேறு ஒரு பழம் ஈச்வரனிடம் பெற்று, அதைக் கணவனுக்கு அளித்து கணவனை ஏமாற்றவா அம்மையார் திட்டம் போட்டார்!

உரையாளர் மனம் போனபடி விளக்கம் செய்யக் கூடாது. அம்மையாராக விருந்து விளக்கம் செய்ய வேண்டும். சேக் கிழார் பெருமானுடைய - உயர்ந்த கருத்துக்களை—ஆராய்ந்து ஆராய்ந்து பன்முறையும் ஆராய்ந்து, விளக்கம் செய்ய வேண் டும்.

சிவனடியார்கள் தாங்கள் செய்துவரும் தொண்டுக்கு பங்கம் ஏற்பட்டால், தங்கள் உயிரையும் விடுவார்கள். (திருக் குறிப்புத் தொண்டர்) அதேபோல் கற்பரசிகளும் கணவருக்குத் தாம் செய்யும் பணியில் பங்கம் ஏற்பட்டால், அவரெதிரில் நிற்க வும் கூசுவார்கள்; பிராணனையும் விடுவார்கள்.

பரமதத்தன் நற்குணங்களையும் நாம் சற்று யோசிக்க வேண்டும். அம்மையார் அளவு பரமதத்தன் பரமன் பாலும், பரமன் அடியார்பாலும் அன்பு திடப்படாமல் இருக்கலாம். ஆனால் அம்மையாருக்கு அவன் துரோகம் செய்யவில்லை. சிற்றின்பத் துறையில் எளியனாகவில்லை. (மங்கையர்க்கரசியார் கணவன்போல்) அம்மையார் செய்துவந்த அடியார் தொண் டுக்கு யாதொரு இடைஞ்சலும் செய்யவில்லை; அம்மையாருக்கு அனுஸரணையாகவே யிருந்தான். அம்மையார் மனோபீஷ்டம் போல், அடியார்களுக்கு செம் பொன்னும், நவமணியும், செழுந்துகிலும் கொடுத்து வந்ததைக் கடிந்து நினையாமல்,

பூரண ஸம்மதத்துடன் ஆதரித்துத்தான் வந்தான். ஆதலால் சரியான சந்தர்ப்பத்தில் அம்மையார் கணவரிடம் உண்மையைத் தெரிவித்து இருப்பார்.

ஆகவே இந்த ஸங்கடமான நிலையில் புருஷனறியாமல் ஒரு விநியோகம் செய்து அவர் எதிரில் எப்படி நிற்பது என்று எண்ணியே (மனம் கூசியே) உள்ளே சென்றார்; உள்ளே சென்று ஈச்வரனை நினைத்தார்; விடையவர் தாள் உணர்ந்தார்.

கனி கொடுங்கள்; அதைக் கணவனுக்குப் படைத்து இந்த ஸங்கடமான நிலையிலிருந்து நான் இந்த ஸமயம் தப்புகிறேன்; உண்மையை மறைத்து அவரை ஏமாற்றி விடுகிறேன் என்று திட்டம் போடவில்லை.

நம்பன் அடியார் சாப்பிட்டது - நம்பனுக்கும் ஆனபடியால் நம்பனே ஒருபழம் அருள் புரிந்தார். அந்த அருள் வழிநின்று கணவருக்கு அதை யிட்டார். கணவன் கேட்காமல் இருந்தாலும் ஸமயம் பார்த்து, ஈச்வரன் அருளையும் வேண்டி உண்மையைக் கணவருக்கு சொல்லியே யிருப்பார். உற்ற ஸமயத்தை ஈச்வரனே ஏற்படுத்தினார். அவர் அருளால், அவர் உள் நின்று ப்ரேரேபிக்க, கணவன் "இதுதான் முற்றரு மாங்கனி யன்று; மூவுலகில் பெறற்கரிதால்-பெற்றது வேறெங்கு" என்று கேட்கிறான்; உடனே அம்மையாரின் மனம் தெளிந்தது (அதுவரையில் கணவரிடம் உண்மையை மறைத்த ஓர் கலக்கம் மனதில் இருந்தது.) மனம் தெளிந்து உண்மையை விளக்குகிறார். உண்மையை விளக்கி மனம் தெளிகிறார். இரண்டு விதமாகவும் சொல்லலாம்.

## செய்யுள் 29.

"ஈசனருள்" எனக்கேட்ட இல் இறைவன் அது
தெளியான்
வாசமலர் திருஅனையார் தமைநோக்கி "மற்றிதுதான்
தேசுடைய சடைப்பெருமான் திருவருளேல் இன்னமும்
ஓர்
ஆசில்கனி அவனருளால் அழைத்தளிப்பாய்" என
மொழிந்தான்.

முன் செய்யுளில் அம்மையார் - உண்மையைச் சொல்லு கிருர். உண்மையை மறைத்து - ஏதேனும் பொய்யாகச் சொல்லுகிருளோ வென்று கணவன் ஸந்தேகப்பட்டதாக நாம் நினைக்கக்கூடாது, அம்மையார் உண்மைதான் பேசுவார் என்று பரமதத்தனுக்குத் தெரியும். ஆனுல் ஈச்வரன் அருள் உண்மையில், இந்த விதம் பிரத்யக்ஷமாகத் தன் மனைவியின் பால் கூடியிருக்குமா வென்று (தெளிவு ஏற்படாத) ஸந்தேகம் தெளிவு ஏற்படாமல், ஸந்தேகம் ஏற்படுவதற்குக் காரணம் பரமதத்தன்பால் ஈச்வரன் அருள் கூடாமைதான். ஈச்வரன் அருள் கூடாததால் அப்பர் ஸ்வாமிகள் சமணமதம் புகுந்தா ரென்று நாம் அறிகிருேம். அதேபோல ஸாதாரண மனிதன் ஆன பரமதத்தனுக்குத் தெளிவு ஏற்படாததற்கும் ஈசன் அருள் இல்லாமைதான் காரணம். ஈசனே அறிவித்தாலன்றி - எப்படி அறிதல் கூடும்? மனம் தெளிவடையாததால் மற்றும் ஓர் பழம் அழைத்தளிப்பாய்" என்ருன்.

## செய்யுள் 30.

பாங்ககன்று மனைவியார் பணி அணிவார் தமைப்பரவி
"ஈங்கிதளித் தருளீரேல் என்னுரை பொய்யாம்"
என்ன
மாங்கனியொன் றருளால்வந் தெய்துதலும் மற்றதனை
ஆங்கவன்கைக் கொடுத்தலுமே அதிசயித்து
வாங்கினுன்.

என்னுரை பொய்யாம் — ஈசனருள் என்று நான் சொன்னது-பொய்யாகிவிடும்.

இந்த ஸமயம் கனி அளித்தருளும்படி வேண்டுகிருர். இரு முறையும் ஈசனருள் என வறிந்து கணவர் மனம் தெளிவு பெற வேண்டும்; மனம் தெளிந்து, ஈச்வரன் தொண்டிலும் அடியார்பணியிலும் கணவரும் தம்முடன் தீவிரமாக ஈடுபட்டு இருவரும் உய்ய வேண்டுமென்று நினைத்திருப்பார்.

ஈச்வரன் மற்றும் ஓர் கனி யருள்கின்ருர்; அம்மையாரின் முன்னுரை பொய்யாகாதிருக்க.

மீண்டும் மனைவியார் கனி பெற்றதைக்கண்டு; அம்மையார் ஒரு ஸாதாரண மானிட ஸ்த்ரீயல்ல, தெய்வ அணங்கு - என்று

கணவன் பக்தியும் பீதியும் கொள்ளுகிருன். பரமதத்தன் அவளுடன் கருத்து ஒருமித்து ஈச்வரனிடம் மாத்திரம் பூர்ண அன்பு கொள்ளும் ஆற்றல் அளவிற்கு மனம் பக்குவம் அடைய வில்லை, அந்த அளவு தெளிவடையாததற்குக் காரணமும் ஈச்வரன் அருள் கூடாமைதான்.

ஆகவே நாம் பரமதத்தனை மிகவும் கேவலமான மனிதனை விடக் கேவலமாக நினைத்துவிடக் கூடாது: பிரத்யக்ஷப்ரமாணம் கண்டபின், பயமும் பக்தியும் கொள்ளாமல், மனைவியை ஸாதாரண ஸ்த்ரீயாகவே பாவித்து, அவருடன் நெருங்கிப் பழகினுல், அப்பொழுதுதான் அவனைக் குறைவாகக் கூறவேண்டும்.

அதிசயித்து வாங்கினுன்: கையினுல் தொட்டுப்பார்த்து **Solid and substantial** தோற்றமல்ல என்று அறிகிருன். ஆனுல் அது உடனே மறைந்துவிடுகிறது. பழம் வந்த அதிசயத்தைக் கணவன் காணவில்லை. மனைவியார் எடுத்து வருவதைப் பார்க்கிருன். ஈச்வரன் அருள்தான்! ஈசனருள் பெற்ற பத்னியாரிடம் ஒரு பக்தி.

தன் கையில் வந்தபின் கனி மறைந்து விடுகிறது. மற்றும் ஓர் அதிசயம். மனைவி கையில் வந்துற்று, தங்கிய பழம், தன் கையில் வந்ததும் மறைந்த நிகழ்ச்சி பீதியை உண்டுபண்ணிற் றென்னலாம்.

தெய்வீகக் கனியைத் தன் கையில் தாங்கவும் தனக்கு யோக்யதையில்லை யென்ற ஓர் பீதி. தெய்வ அணங்குடன் அவள் கணவனுக எப்படி வாழ்வது என்ற பீதி. ஆக அம்மை யாரிடம் தெய்வ பக்தியும், ஒருவித பீதியும் கொண்டான்.

இரண்டாவது பழத்தைக்கண்டு, அதையும் சாப்பிடவேண் டும் என்று ஆசை மேலிட்டு அவஸரமாகக் கை நீட்டி பழத்தை வாங்கவில்லை.

## செய்யுள் 31.

வணிகனும் தன் கைப்புக்க மாங்கனி பின்னைக் காணுன்
தனிவரும் பயமேற் கொள்ள உள்ளமும் தடுமாறெய்தி
அணிகுழ லவரை வேருேர் அணங்கெனக் கருதி நீங்கும்
துணிவுகொண் டெவர்க்கும் சொல்லான் தொடர் வின்றி ஒழுகு நாளில்

தொடர்பின்றி சில நாள் இருந்து - பின்பு அவரை விட்டு நீங்கும் ஏற்பாடு செய்தான்.

## செய்யுள் 38.

" அவர் தம் நாமம் காதல் செய் மகவையிட்டான் "

திரு. ஸி. கே. ஸு. முதலியார் அவர்கள் குறிப்பு :—

(பக்கம் 854) " பாம்புகள் முதலியவற்றின் அதி தெய்வங் களுக்குப் பொங்கலிட்டு வழிபட்டு நீவிர் இனி இங்குவந்து எமது கண்ணிற் காணக் காட்டுதல் கூடாது என்று வழிபடும் நாட்டுச் சிறு தெய்வ வழிபாட்டு முறையினைப் பற்றிக் கொண்டு வணிகன் இவ்வாறு வேண்டினன் என்பது. "

பரமதத்தன் அம்மையாரைத் தெய்வ அணங்கு பரமேச்வரி போன்றவள் - அவளுடன் வாழ்வதற்குத் தனக்கு யோக்யதை யில்லை யென்று ஒதுங்கினானே தவிர அவள் ஏதோ க்ஷுத்ர தேவதை என்று பயந்து அல்ல. சிறு தெய்வ வழிபாட்டு முறையைப் பின்பற்றினான் என்று சொல்வது ஸரியல்ல. ஸாக்ஷாத் ஈச்வரன் ஈச்வரியின் நாமாக்களை நாம் நம் குழந்தை களுக்கு வைப்பதுபோல, பரமதத்தனும் – தான் பரமேச்வரியாக பாவித்து பக்தி கொண்ட புனிதவதியாரின் பெயரைத் தன் குழந்தைக்கு வைத்தான்.

செய்யுள் 45. "யானுமதருளால் வாழ்வேன்"

செய்யுள் 47. " நற்பெருந் தெய்வமாதல் "
"பொற்பதம் பணிந்தேன்"

என்று பரமதத்தன் சொல்வதையும் கவனிக்க.

பரமதத்தன் அம்மையாரை - க்ஷுத்ர தெய்வம் போலும், சிறு தெய்வம் போலும் எண்ணி, வழிபட்டு, ஒதுங்கினான் என்று சொல்லக்கூடாது.

செய்யுள் 42. " காதல் செய் சுற்றத்தாரும் "

சுற்றத்தார்கள் அழைத்துச் சென்றார்கள் என்றபடியால், தாய் தந்தையர்கள் சிவபதம் அடைந்து விட்டார்களென்று நாம் ஊகித்துக் கொள்ளவேண்டும். பின்வரும் 46-ம் செய்யுளிலும்

" சுற்றத்தார்பால் அச்சமோடொதுங்கி நிற்ப " என்று பாடியிருக்கிறார். தாயார் இருந்தால், தாய் தான் மகளைக் கணவனிடம் சேர்ப்பிக்கச் சென்றிருப்பாள். அம்மையார் தாயார் பக்கம் ஒதுங்கியிருப்பார்.

செய்யுள். 48 பரமதத்தன் சொன்ன விஷயத்தைக்கேட்ட சுற்றத்தார்கள் இந்த தெய்வீக காரணத்திற்கு ஒரு தீர்ப்பும் சொல்ல யோக்யதை யில்லாதவர்கள் " இது என் கொல்! " என்று பிரமித்து நின்றார்கள். இனி முடிவு செய்ய வேண்டியது அம்மையார்தாம். அன்னாரும் அண்ணலார் அடிகள் போற்றி ஒரு முடிவுக்கு வருகிறார்.

## செய்யுள் 49.

ஈங்கிவன் குறித்த கொள்கை இது; இனி இவனுக் காகத்
தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்திங் குன் பால்
ஆங்குநின் தாள்கள் போற்றும் பேய்வடிவு அடியே னுக்குப்
பாங்குற வேண்டும் என்று பரமர்தாள் பரவி நின்றார்.

சேக்கிழார் பெருமான் பரமதத்தனை ஏகவசனத்தில் சொல்லலாம், ஈச்வரன் அருள்பெறுதவன் என்ற காரணத்தால், அம்மையார் வாக்கில் " இவன் " என்று வரலாமா ? எந்த ஸ்திரீயும் தன் கணவனை ஏகவசனத்தில் இவன் என்று சொல்லமாட்டாள். ஒரு உத்தமி, பதிவிரதை சொல்லலாமா ? தன்னிடம் தெய்வபாவம் கொண்டு வணங்கும் கணவரை அம்மையார் ஏகவசனத்தில் மரியாதைக் குறைவாகப் பேசியிருக்கமாட்டார்.

அம்மையார் தம் கணவரைப் பற்றி பேசுவது இதுவே முதல் தடவை ; இதுவே கடைசித் தடவை. அவர் இருமுறை ஈச்வரனருளைப் பெற்றதைப் பிரத்யக்ஷமாகக் கண்டு அவரை நல் தெய்வமாக பாவித்தது கணவர்மேல் குற்றமாகுமா ? இவன் என்று சொல்வதால் அம்மையாருக்கு என்ன தனிப் பெருமை வந்துவிட்டது ? இவர் என்று சொல்லியிருந்தால் என்ன சிறுமை ஏற்பட்டிருக்கும் ? ஈசனருள் கூடி, அம்மையார் என்புருவம் பெறும் வரையில். மானுட உடம்புடன் இருக்கும் போது - கணவர் கணவர்தானே.

ஆகவே, அம்மையரர் என்ன சொல்லியிருப்பார் ? ஆஹா ! இதுவரையில், இவர், நம் கணவர், மனேபாவம் தெரியாமல்; வியாபாரத்துக்காக வெளி நாடு சென்ற நம் கணவர், ஒரு நாள் திரும்பிவருவார், அவருடன் பண்டைநாள் போல் வாழ்வோம் என்று எண்ணி, அவருக்காக இந்த சரீரத்தையும் வனப்பையும் தாங்கியிருந்தேன். இனி இந்த சரீரம் எனக்கு வேண்டாம், இந்த வனப்பு வேண்டாம் என்று தீர்மானித்து, மாம்ஸ உடலை உதறிவிடவேண்டி ஈச்வரனைப் என்பு (பேய்) வடிவம் வேண்டினர். ஈச்வரனும் அவர் வேண்டியதை வேண்டியவாறே அனுக்ரஹித்தார்.

இதனல் நான் சேக்கிழார் வாக்கில் குறை சொல்வதாக யாரும் நினைக்கக்கூடாது. சேக்கிழார் பெருமான் அம்மையார் வாக்கில் ' இவர் ' என்ற பதத்தை வைத்துத்தான் பாடியிருப் பார்.

'' ஈங்கிவர் குறித்த கொள்கை யிது ; இனி இவருக்காகத் தாங்கிய ''

என்று தான் பாடியிருப்பார். சேக்கிழார் மற்ற இடங்களில் ஏகவசனமாகப் பாடியிருப்பதை யனுஸரித்துப் பதிப்பாளர்கள் ஏட்டுப் பிரதிகளில் இருந்த ''இவர்'' என்ற பதத்தை ''இவன்'' என்று மாற்றியிருப்பார்கள் என்பது தான் என் அபிப்ராயம்.

## செய்யுள் 50.

ஆனஅப் பொழுது மன்றுள் ஆடுவார் அருளினலே
மேல்நெறி உணர்வு கூற வேண்டிற்றே பெறுவார் மெய்யில்
ஊனடை வனப்பை எல்லாம் உதறி எற்புடம்பேயாக
வானமும் மண்ணும் எல்லாம் வணங்குபேய் வடிவம் ஆனர்.

அவர் விரும்பியவாறே ஈச்வரன் அனுக்ரஹித்தார். ஊனுடம்பையும், வனப்பையும், சதையையும் உதறி எற்புடம் பாய் நின்றார்.

காலம் சென்ற வஸிஷ்ட பாரதியார் காரைக்கால் அம்மையார், சரித்திரம் சொல்லும் போது, இந்த இடத்தில் ஓர் தனி வெடி போட்டார். ஸ்ரீ ராமாயணத்தில் ஸீதையைப் பார்த்தது முதல் ராவணன் அவள் மேல் இச்சை கொண்டான். தன் கைகளால் அவளைத் தூக்கிச் சென்றான்.

பின்னர் அசோகவனத்தில் பல தடவைகள் அவள் முன் நின்று காமமொழிகள் பேசுகிறான்.

வஸிஷ்ட பாரதியார் சொன்னது :— காமங்கொண்ட ஒரு பரபுருஷன் — ராக்ஷஸன் — தன்னைத் தொட்டுத் தூக்கிச் சென்றபோது ஸீதை ஏன் உயிர் தரித்திருக்கவேண்டும்? உயிரை விடுவதற்கென்ன? பிறர் பார்க்கும்படி வனப்பு இருக்கக் கூடாதென்று — வனப்பை உதறின அம்மையாரின் பெருமை எங்கே! ராவணன் தொடும்படிக்கும், பார்த்துக் காம மொழிகள் பேசும் படிக்கும் வனப்பைத் தாங்கியிருந்த ஸீதையின்—எங்கே! ஸீதையைக் காட்டிலும் காரைக்கால் அம்மையார் கோடி பங்கு உயர்ந்தவர் என்று அழுத்தமாகப் பேசினார். அவர் சொன்னது உண்மைதான். ஒரு சிவனடியார் சரித்திரத்தில் நாம் தெரிந்துகொள்ளும் உயர்ந்த சிவதத்வங்களை, நாம் ராமாயணத்தில் காண முடியாது.

சிவ பக்தியில் சிறந்தவர்களான பெரிய சிறுத் தொண்டரும் அவர் மனைவியும் மனம் உவந்து, தம் ஐந்து வயதுக் குழந்தையை — ஒரே குழந்தையை — ஈச்வரார்ப்பணம் செய்த சிவத் தன்மை எங்கே! நாலு குழந்தைகளில் ஒருவனை, தன் வீர்யத்திற்குப் பிறக்காத, ராமன் காட்டுக்குப் போகிறானே யென்று அடித்து விழுந்து உயிர் நீத்த தசரதருடைய பசுத் தன்மை (பாசபந்தம்) எங்கே! மனைவியை சிவனடியார்க்கு உரிமையாக்கின இயற்பகை நாயனார் பெருமையை, ராமாயணத்தில் பார்க்க முடியுமா? ராமாயணம் ஒரு ஸாதாரண மனுஷ்ய வாழ்க்கை கிரந்தம், ஒவ்வொரு சிவனடியார் வாழ்க்கையும் பசுத்தன்மை நீங்கிய வாழ்க்கை.

---

கம்பர் காவ்யத்தில் — அவர் காலத்து நியமக் கொள்கைகளை அனுஸரித்து. ஸீதையைத் தொடாமல், அவள் நின்ற பூமி பாகத்துடன் தூக்கிச் சென்றதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

பிருகு மஹரிஷி ஆச்ரமத்தில் இல்லாத போது, விஷ்ணு சக்ராயுதத்தரல், பிருகு பத்னியின் கழுத்தை யறுத்தாரென்றும், பிருகு முனிவர் கொடுத்த சாபத்தின் காரணமாக ராமாவதாரம் எடுத்தாரென்றும், ஸீதையை விட்டுப் பிரிந்து கஷ்டப்பட்டா ரென்றும். வால்மீகி ராமாயணம் ஏழாவது காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறதே எந்த உபந்யாஸகராவது, ஹரிகதா காலக்ஷேபம் செய்பவராவது இந்த விஷயத்தைச் சொல்லு கிறாரா ?

ராமர் ஒரு சிவபக்தர் ; விபூதி ருத்ராக்ஷம் அணிவார் ; வேத ஸார சிவ ஸஹஸ்ர நாமம் பாராயணம் செய்தார் ; அகஸ்த்ய மகரிஷியிடம் சிவகீதை கேட்டார்—இந்த உண்மைகளை யாரா வது சொல்லுகிறார்களா ?

ஆனால் உண்மைகளை மறைத்து, சிவன் விஷ்ணுவைப் பூஜிப் பாரென்றும், தினம் முதல் காரியமாக விஷ்ணு ஸஹஸ்ர நாமம் பாராயணம் செய்வாரென்றும், ராம நாமமே தாரக மந்தரமென்று ஜெபித்து வருகிறார் என்றும் பார்வதிதேவிக்கு ராமநாமத்தை உபதேசம் செய்தாரென்றும், காசியில் மரண மடைந்த ஜீவர்களுக்கு ராம தாரக மந்த்ரம் உபதேசம் செய்கிறார் என்றும் சொல்லத் தவறுவதில்லை, நான் விபூதி ருத்ராஷம் அணிந்த ஸ்மார்த்தர்களைத்தான் குறிப்பிடுகிறேன். இம்மாதிரி உண்மையை மறைத்து பேசும் ஸ்மார்த்தப் பிராம்மணர்களைக் குறித்துதான் வேதம் “ ஸ விப்ர : பாபியான் பவதி ” என்று சொல்லுகிறது. இந்த அபத்த வாசகங்களைக் கேட்டுப் பாமர ஜனங்கள் ஆயிரம் ஆயிரம் ஆகக் கொடுத்து—மோக்ஷத்தில் இடம் முன்னதாக ஏற்பாடு செய்து கொள்ளுகிறார்கள்!! விஷ்ணு, ராமர், கிருஷ்ணர், எல்லோரும் சிவபக்தர்கள் ; சிவதீக்ஷை பெற்று சிவபூஜை செய்தவர்கள். அந்த மூர்த்திகளுக்குக் விபூதி, ருத்ராக்ஷம் அணிவித்து, ஈச்வரனாக பாவித்துப் பூஜை செய்வதே முறை,

செ. 51. “ உலகெலாம் நிறைந்து விம்ம ” உலகெலாம் என்ற பதம் பிரயோகம் ஆகியிருப்பதைக் கவனிக்கவும்.

செ. 53, 54. திரு ஸி. கே. ஸு. முதலியார் அப்பர் ஸ்வாமி கள் கைலாஸ யாத்திரையையும், அம்மையார் யாத்திரையையும் நன்றாக விளக்கியிருக்கிறார். (பக்கம் 869) எனக்கு ஒரு புதிய கருத்தும் தோன்றுகிறது. அப்பர் சுவாமிகள் மானிட சரீரத் துடன் கயிலைமேல் நடந்தும் ஊர்ந்தும் சென்றார். ஈச்வரன் ஒரு முனிவராக எதிர் தோன்றி (புராணம் செய்யுள் 365).

கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலும்மானுடப் பான்மையோர் அடைவதற் கெளிதோ
அயில்கொள் வேற்படையமரரும் அணுகுதற் கரிதால்—

அவரைத் திரும்பும்படி சொல்லி திருவையாற்றில் கைலாஸ காக்ஷி காண்பிக்கிறார். இங்கே அம்மையார் மானிட உடம்பை உதறி எறிந்து ஏற்புடம்புடன் போகிறார். அதனால் அம்மையப்பரைக் கைலாயத்திலேயே பார்த்து வணங்கி அனுக்ரஹமும் பெறுகிறார். என்னே அம்மையாரின் பெருமை!!

## செய்யுள் 55.

வடதிசைத் தேய மெல்லா மனத்தினும் கடிது சென்று
தொடையவிழ் இதழி மாலைச் சூலபா ணியனார் மேவும்
படரொளிக் கயிலை வெற்பின் பாங்கணைந் தாங்குக் காலின்
நடையினைத் தவிர்ந்து பார்மேல் தலையினால் நடந்துசென்றார்

கைலைமலையை சிவஸ்வரூபமாகக் காணவேண்டும், அம்மையாரும் அப்படியே கண்டார். மலையின் அடிவாரம் ஈச்வரனுடைய திருவடிகள் ஆம். ஆகவே கைலை மலை ஏறும்போதே அம்மையார் தம் தலையைத் திருவடிகளில் பொருத்தி விட்டாரென்ற சிறந்த குறிப்பையும் அறிந்து ஆனந்தம் கொள்வோம்.

தலையைக் கீழே ஊன்றி கால்களை மேலே தூக்கித் தலையால் நடந்து சென்றார் என்று எல்லாரும் பொதுவாகச் சொல்லுகிறார்கள். இந்த நிலையில் எனக்கு ஒரு சங்கை. முகம் ஈச்வரன் இருந்த இடம் பார்க்க இருந்ததா, எதிர்புறம் பார்க்க இருந்ததா வாசகர்களும் யோஜித்துப் பாருங்கள்.

என் மனதில் தோன்றும் அபிப்ராயம்.

முகம் எதிர்புறம் பார்க்க இருந்தது; கால்கள் மேல் நோக்கி இடுப்புக்குமேல் இரு கால்களையும் மடக்கி, ஈச்வரன் பக்கம் நீட்டாமல்—எதிர் புறமாக, அதாவது முகம் பார்க்கும் திக்கில் நீட்டப்பட்டிருந்தன [முகத்திற்கு எதிர்புறமாக கால்களை மடக்க முடியாது—நீட்ட முடியாது.] இந்த நிலையில் ஏறிச் சென்றால், ஈச்வரன் திருவடிகளைச் சார்ந்ததும் முகத்தை அப்படியே ஈச்வரனுடைய திருவடிகளில் பொருந்தும்படி வைத்துக், கால்களை நீட்டி, ஸாஷ்டாங்க நமஸ்காரம்போல் அமையும். முகம் பொருந்

தும் ஸமயத்தில், திருவடிகளை மாத்திரம் காணும்படி அமையும்; திருவடிகளுக்குமேல் ஈச்வரனுடைய அங்கங்களைப் பார்க்கவே முடியாத உயர்ந்த நிலை அமையும்.

முகம் ஈச்வரன் இருக்கும் பக்கம் பார்த்ததாக நாம் கொண்டால், கால்கள் முழுதும் மேலே தூக்கி நிற்க வேண்டும். திருவடிகளில் தலையைப் பொருத்தும்போது, முகம், என்புவடிவம் திரும்பியாகவேண்டும்; ஏறும்பொழுது. ஈச்வரனுடைய பாதாதி கேசம் பார்த்ததாக அமையும்; திருவடிகளைமாத்திரம் கண்டாரென்ற சிறப்பு தர்சனம் அமையாது.

செய்யுள் 58: "ஒருமொழி உலகெலாம் உய்யவே யருளிச் செய்தார்" "உலகெலாம்" என்றபதம் இரண்டாம் முறையாக இந்த புராணத்தில் அமைத்திருக்கும் சிறப்பு கவனிக்கவும்.

செய்யுள் 60: இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின்
வேண்டுகின்ருர்
பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை
யென்றும்
மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டும் நான்
மகிழ்ந்து பாடி
அறவா நீ யாடும் போதுன் னடியின் கீழிருக்க"
வென்ருர்.

பிறவாமை வேண்டும்:— இப்பொழுது எற்புடம்பில் உயிருடன் இருக்கிருர். இறந்த பின் தான் மறுபடி பிறப்பு. ஆகவே "பிறவாமை வேண்டும்" என்று கேட்டபோதே — அதற்குமுன் நிகழ்ச்சியான இறவாமை வேண்டுமென்றே கேட்டவாறும் ஆயிற்று. அதாவது — இப்பொழுது இருக்கும் எற்புடம்பு அழியாத வரம் கேட்டபடி ஆயிற்று. ஈச்வரன் அனுக்ரஹமும் அவ்வாறே அமைந்தது.

இந்தச் செய்யுளில் உள்ள கருத்துக்கள் ஸ்ரீமத் நீலகண்ட தீக்ஷிதர் அவர்களும் தம்முடைய ஆனந்தஸாகரஸ்தவம் என்ற கிரந்தத்தில் அமைத்திருக்கிருர்.

நாஹம் ஸஹே தவ கதா ச்ரவணந்தராயம்
நாஹம் ஸஹே தவ பதார்ச்சன விச்யுதிம் வா!
மோக்ஷம் திச ஏதத் அவிருத்தமிதம் ந சேத் ஸ்யாத்
நைவாஸ்து மாதரபவர்க்க மஹோபஸர்க்க: !!

ஹே, மீனும்பிகே, உன்னுடைய பிரபாவங்களை நான் கேட்டுக் கொண்டே இருக்கவேண்டும். அதற்கு ஒரு முடிவு வந்தால் நான் ஸகிக்கமாட்டேன்; உன் பாத பூஜை செய்து கொண்டேயிருக்கவேண்டும். அந்த இன்பத்திற்கும் ஒரு முடிவு. என்று இருக்கப்படாது அதாவது உன் புகழ்களைப் பாடிக் கொண்டும், உன் பிரபாவங்களை எப்பொழுதும் கேட்டுக் கொண்டும், ஸதா உன் பாத பூஜை செய்து கொண்டும் இருக்கவேண்டும். முடிவில்லாத (இறவாத) இந்த இன்பங்களை நான் அனுபவித்துக் கொண்டேயிருக்கவேண்டும். அந்த விதம் மோக்ஷம் என்று ஒன்று இருக்குமானுல் அந்த மோக்ஷத்தை யருள் செய். இறவாத. இன்ப நிலையில் நான் திளைக்க முடியாத படி — ஒரு மோக்ஷம் எனக்கு இடைஞ்சல்; அது எனக்கு வேண்டாம்.

ஸ்மார்த்த ப்ராம்மணர்கள் ஏனோ இந்த உயர்ந்த கிரந்தங்களைப் பிரசாரம் செய்வதில்லை.

ராமாயணம், பாரதம், பாகவதம், பகவத்கீதை, நாராயணீயம், ஹரிவம்சம், வைஷ்ணவ ஆழ்வார்கள் தாஸர்கள் சரித்திரங்கள் இவைகளில் ஸ்மார்த்த ப்ராம்மணர்களுக்கு இருக்கும் ஆர்வம் பற்றுதலில், கோடியில் ஒரு பங்கு, ஒரு சிவனடியார் சரித்திரத்தில் என்றைக்கு வருமோ! ஈச்வரா! இதுவும் ஒரு திருவிளையாடலா?

## செய்யுள் 65.

மடுத்த புனல் வேணியினுர் "அம்மை" யென மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றுரைக் குலவியதாண்ட வத்திலவர்
எடுத்தருளும் சேவடிக்கீழ் என்றுமிருக் கின்ருரை
அடுத்தபெருஞ் சீர்பரவல் யாரளவா யினதம்மா!

நடராஜாவின் நடனமும் நித்யம்
அவரடிக்கீழ் அம்மையார் இருந்து பாடுகிறதும் நித்யம்.

சுபம்.

# அனுபந்தம்

## அம்மையார் பாடியவை

(1) அற்புதத் திருவந்தாதி
(2) திருவிரட்டை மணிமாலை —அந்தாதி
(3) மூத்த திருப்பதிகம் — 1
(4) ஷை — (2)

## அற்புதத் திருவந்தாதி

பாடல் 41.

ஒருபால் உலகளந்த மாலவனு மற்றை
யொருபால் உமையவளா மென்றால்—இருபாலும்
நின்னுருவ மாக நிறந்தெரிய மாட்டோமால்
நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து,

இதனுடைய உண்மை தத்வம் எனக்கு விளங்கவில்லை. இடது பாகம் - உமை பாகம்; திருமாலும் இடது பாகத்தைத் தான் பெற்றார்.

வலது, இடது இரண்டு பாகங்களையும் திருமாலும் உமை யம்மையும் பெற்றதாகப் பாடுவது ஒருவிதமான கற்பனையே தவிர, உண்மையாகாது என்று நான் நினைக்கிறேன்.

(தி. வி. அ.)

ஒருபால், மற்றை ஒருபால். என்ற பதங்கள், வலது பாதி இடதுபாதியைக் குறிக்கவேண்டும். இடது பாகம் உமைபாகம் : பிரஸித்தம்; அப்பொழுது வலது பாகம் திருமால் என்று ஆகும். இதற்கு ஆதாரம் இல்லை. திருமாலும் இடது பாகத்தைத்தான் பெற்றார், "மற்றை யொருபால்" என்ற பதங்கள் போடுவதற்கு அவசியம் தெரியவில்லை. இடம் மால் வலம் தான் என்ற பொன் வண்ணத்தந்தாதிப் பாடலையும் கவனிக்க. கேசவார்த்த மூர்த்தத்திலும் திருமால் இடது பாகம் தான் பெற்றிருக்கிறார். லிங்கோத்பவ மூர்த்த வரலாற்றிலும் ஈச்வரன் பிரம்மாவை வலது பாகத்திலிருந்தும், விஷ்ணுவை இடது பாகத்திலிருந்தும் தோற்று வித்தார் என்று சொல்லப் பட்டிருக்கிறது.

ஆனால்

சித்தாந்த வித்தகர் கயப்பாக்கம் உயர்திரு சோம சுந்தரம் செட்டியார் அவர்கள், 3—4—1958 ல் வெளியிட்ட காரைக்கால் அம்மையார் வரலாறு என்ற புத்தகத்தில் எழுதியிருப்பது (பக்கம் 16)இந்த பாடலின் உயர்ந்த கருத்துக்களை விரிவாகச் சித்தாந்த சாஸ்திரங்களில் பரக்கக் காணலாம். ஆகவே சாஸ்திர ஞானமும் பயிற்சியும் உள்ளவர்கள் அறிவார்கள். மற்றவர்கள் சாஸ்திரம் படித்தவர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவும்.

மகாகவி காளிதாஸரும் - இதுபோன்ற ஓர் கற்பனையை ஒரு சுலோகத்தில் அமைத்ததாகச் சொல்லப்படுகிறது.

அர்த்தம் தானவ வைரிணு கிரிஜயாப்யர்த்தம் ஹரஸ்யா ஹ்ருதம்.
தேவேத்தம் ஜகதீதலே புரஹரா பாவே ஸமுன்மீலதி |
கங்கா ஸாகரம் அம்பரம் சசிகலா நாகாதிப: க்ஷ்மாதளம்
ஸர்வக்ஞத்வ மதீச்வரத்வமகமத் த்வாம் மாம்து பிக்ஷாடனம் ||

இதன் தாத்பர்யம் விஷ்ணு ஒரு பாதி எடுத்துக்கொண்டு விட்டார்; கிரிஜா ஒருபாதி எடுத்துக்கொண்டு விட்டாள்; புரஹரன் இருப்பதற்கு இடமில்லாமல் மறைந்துபோனான். ஆகவே அவன் சிரஸில் இருந்த கங்கை-ஸமுத்திரத்தைப்போய் அடைந்தது. சந்திரன் ஆகாயத்தை அடைந்தான். ஸர்ப்பங்கள் பாதாளத்தில் சேர்ந்தன. ஸர்வக்ஞத்வம், அதீச்வரத்வம். ஹே, போஜராஜன்! உங்களை வந்து அடைந்தது! பிக்ஷை ஓடு என்னை வந்து அடைந்தது !!

சிலகாலம் மறைந்திருந்த காளிதாஸன் எழுதிக் கொடுத்த இந்த ச்லோகத்தை ஒரு ஸாதாரண கவி போஜராஜனிடம் சென்று பாடினரென்றும், கவியின் சிறப்பையும் கற்பனைத் திறத்தையும் கண்டு போஜராஜன் காளிதாஸன்தான் பாடியிருக்க வேண்டுமெனத் தீர்மானித்து, பாடின ஸாதாரண பிராம்மணனை உண்மை விசாரித்து காளிதாஸன் இருப்பிடத்தைக் தெரிந்து கொண்டானென்றும் வரலாறு.

தி. வி. அ. சிரெனதி.